[7th May 1962

*The Madras Preservation of Forests Act, 1959 (Convictions)*

* 40 Q.—SRI J. MATHA GOWDER : கனம் கூட்டுறவு அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா :—

(அ) நீலகிரியில் தனியார் காடு பாதுகாப்பு சட்டத்தின்கீழ் 1960-ம் ஆண்டு முதல் 1962-ம் ஆண்டுவரை எத்தனை பேர்களுக்குத் தண்டனை அளிக்கப்பட்டிருக்கிறது ;

(இ) மொத்த அபராதத் தொகை எவ்வளவு ?

THE HON. SRI N. NALLASENAPATHI SARKARAI MANRADIAR : (*a*) 45 (up to 10th April 1962).

(*b*) ரூபாய் 1,350.

SRI J. MATHA GOWDER : ஸார், இதெல்லாம் தனியார் காடு. பெரிய பாரஸ்ட்கூட அல்ல. சாதாரணமாக, அப்படிப்பட்ட இடத்தில் ஒரு மரம் இருந்தால், அதை வெட்டினால்கூட அவருக்கு 300, 200 என்று மாஜிஸ்திரேட் கோர்டில் அபராதம் விதிக்கப்படுகிறது என்பதற்காகத்தான் இந்தக் கேள்வியை போட்டிருக்கிறேன். பெரிய பாரஸ்ட் இல்லை. சொந்தத்திற்காக, டொமஸ்டிக் பர்பசுக்காக உபயோகப்படுத்திக் கொள்வதாக இருந்தால், அதற்காக வெட்டினால் தவறில்லை என்கிற முறையில் இந்தச் சட்டத்திலிருந்து விதிவிலக்கு அளிக்க இதை கனம் அமைச்சர் அவர்கள் பரிசீலனை செய்து, அதற்கு நல்லதொரு முடிவு சொல்ல முடியுமா ?

(பதில் இல்லை).

*Tyre factory*

* 41 Q.—SRI J. MATHA GOWDER : கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சென்னையில் டயர் உற்பத்தி சாலை அமைக்கும் உத்தேசம் உண்டா ?

(இ) ஆம் என்றால், எப்போது அமைக்கப்படும் ?

(உ) ஆண்டுக்கு எத்தனை டயர்கள் உற்பத்தி செய்யப்படும் ?

(எ) எத்தனை பேர்களுக்கு வேலை வாய்ப்பு கிடைக்கும் ?

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) There is no proposal to establish a tyre factory in the public sector. Certain private industrialists have applied to the Government of India for the grant of licences to set up tyre factories in Madras.

(இ) No information is available.

(உ) & (எ) Since the matter relates to the private sector, it is considered not desirable to give the particulars.

SRI J. MATHA GOWDER : ஸார், தனியார் துறையிலே இந்த டயர் உற்பத்தி சாலைகளுக்காக சர்க்காருக்கு மனு கொடுத்திருக்கிறார்களா ? அப்படி மனு கொடுத்திருந்தால் லைசன்சுகள் வழங்கப்படுமா என்று அறிய விரும்புகிறேன். அப்படி தனியார் துறையிலே டயர் உற்பத்திசாலை ஆரம்பிப்பதாக இருந்தால், எப்படி ஆரம்பிக்கப்படும் என்பதை கனம் அமைச்சர் அவர்கள் சொல்ல முடியுமா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : சென்னையைப் பொறுத்த அளவில் இரண்டு கம்பெனிகளுக்கு லைசன்சு வழங்கப்பட்டது. அதிலே ஒன்று உற்பத்தியை ஆரம்பித்துவிட்டது. மற்றொன்று உற்பத்தி தொடங்க இருக்கிறது. மூன்றாவது கம்பெனிக்கு, 2, 3 தனிப்பட்டவர்கள் மனுக்கள் போட்டிருக்கிறார்கள். புதிதாக இனி கம்பெனிகளுக்கு லைசன்சு கிடைக்குமா, கிடைக்காதா என்பதும், அகில இந்திய ரீதியிலே நம்முடைய தேவைக்குப் போதுமான டயர்கள் உற்பத்தி செய்யப்படுகின்றதா, மேலும் வேண்டுமா என்பதை பரிசீலனை செய்து, அதன்படி விஸ்தரிக்கப்படுவதைப் பொறுத்துள்ளது.

7th May 1962]

SRI V. S. S. MANI : சைக்கிள் டயரா அல்லது மோட்டார் டயரா என்று விளக்க முடியுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இரண்டு டயர்களும்தான்.

SRI J. MATHA GOWDER : தனியார் துறையிலே மற்றவர்கள் இப்பொழுது விண்ணப்பித்திருக்கக்கூடிய தொழிற்சாலை சென்னையில் என்றால் சென்னையிலோ அல்லது சென்னைக்கு அருகாமையிலோ என்று அவர்கள் குறிப்பிட்டு கேட்டிருக்கிறார்களா ? இப்பொழுது நமக்கு தேவையான டயர்கள் உற்பத்தி ஆகின்றன என்று கருதப்படுகிறதா அல்லது உற்பத்தி குறைவாக இருக்கிறதா ? உற்பத்தி குறைவு என்றால், மத்திய சர்க்காரிடம் சொல்லி மேலும் ஒரு தொழிற்சாலை அமைப்பதற்கு லைசென்ஸ் வழங்குவதற்கு கனம் அமைச்சர் அவர்கள் வற்புறுத்துவார்களா ?

THE HON. SRI R. VENKATARAMAN : பிளானிங் கமிஷனை பொறுத்த அளவிலே இப்பொழுது அவர்கள் தீர்மானித்திருக்கிற 37 லட்சம் டயர்கள் போதுமானது என்று நினைக்கிறார்கள். ராஜ்ய சர்க்கார் அது போதாது, இன்றைக்கு நம்முடைய டிரான்ஸ்போர்ட்டு வேகமாக விரிவடைந்து வருவதன் காரணமாக இதை இன்னும் விஸ்தரிக்க வேண்டும் என்று கருதுகிறார்கள். அவ்வாறு அவர்கள் மத்திய சர்க்காருக்கும் சொல்லியிருக்கிறார்கள். அந்த அடிப்படையில்தான் புது லைசென்ஸுக்கு அப்ளிகேஷன் வந்ததைக்கூட ராஜ்ய சர்க்கார் சிபார்சு செய்து அனுப்பியிருக்கிறார்கள்.

*Counterfeit notes (Printing)*

*42 Q.—SRI J. MATHA GOWDER : கனம் முதல் அமைச்சர் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சென்னை நகரில் பத்து ரூபாய் கள்ள நோட்டு தயாரித்திருப்பது சர்க்காருக்குத் தெரியுமா ;

(இ) இது விஷயமாய் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) Yes, Sir.

(b) The case is under investigation by the Police.

SRI J. MATHA GOWDER : எத்தனை பேர்கள் இதுவரையிலே 10 ரூபாய் கள்ள நோட்டு அச்சடித்ததற்காக அரெஸ்டு செய்யப்பட்டிருக்கிறார்கள் ? இதுபற்றி கோர்ட்டில் ஒருக்கால் கேஸ் இருக்கலாம். ஆனால் எத்தனை பேர்கள் பிடிபட்டிருக்கிறார்கள் ? எத்தனை ஆயிரம் ரூபாய் கள்ள நோட்டு அச்சடித்ததாக இதுவரையில் கண்டுபிடித்திருக்கிறார்கள் என்பது பற்றி சொல்ல முடியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இது சம்பந்தமான கேஸைப் பொறுத்த அளவிலே போலீஸ் பரிசீலனையில் இருக்கிறது. ஆகையினால், இதற்கு மேலே விபரங்கள் கூறாமல் இருப்பது நலம்.

SRI K. A. MATHIALAGAN : எவ்வளவு 10 ரூபாய் கள்ள நோட்டு சர்குலேஷனில் இருக்கிறது என்பதை கணக்கிட்டு மந்திரி அவர்கள் விவரம் கூறமுடியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM . அது எப்படி அரசாங்கத்திற்குத் தெரியும் ? சர்குலேஷனில் அரசாங்கம் அனுமதித்தால் தான், அதற்குக் கணக்கு கொடுக்க முடியும். அரசாங்கத்திற்கு தெரியாமல் இருக்கலாம்.

PULAVAR K. GOVINDAN : அரசாங்கம் மானுவாரியாக கரென்ஸி நோட்டுகள் அச்சடித்து அனுப்புவது தான் இப்படி தனியார்களுக்கு ஒரு ஊக்கம் கொடுக்கிறது என்பதை அரசாங்கம் அறிந்திருக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்த அரசாங்கம் மானுவாரியாக கரென்ஸி நோட்டு அச்சடிக்கிறது என்று சொல்லுவதினால் தவறுதலான அர்த்தம்கூட ஏற்படலாம். கனம் அங்கத்தினர் கூறுவது